# அவன் ஒரு அனாதை

பி.எஸ். கிருஷ்ணமூர்த்தி

## 1

*அவன் அனாதை!*

அவனுக்கு வீடில்லை. உற்றார் உறவினர் கிடையாது. அவனுக்காக உலகில் ஒன்றுமே கிடையாது. கடவுள் தவிர.

*அவன் அனாதை!*

அவன் பிறந்தது மதுரை ஜில்லாவிலுள்ள ஓர் குக்கிராமம். அவனது மூன்றாவது வயதில், ஊரில் 'மகாமாரி' தோன்றியதன் காரணமாக அவனது தாயை இழந்தான்.

இரண்டு வருஷங்கள் தனது தந்தையின் போஷணையில் வளர்ந்தான். அதன் பிறகு, கடுமையான க்ஷயரோகம் என்னும் வியாதியால் அவனது தந்தையும் மரித்தார்.

பின்னர் அவனைக் காப்பாற்றுவோர் யாருமில்லை. அவன் பிச்சை யெடுத்துச் சாப்பிட வேண்டிய ஸ்திதியில் வந்துவிட்டான். அவன் ஊரூராகச் சுற்றினான். ஓரிடத்தில் நிலைக்கவில்லை.

*அவன் அனாதை!*

## 2

தஞ்சாவூருக்குக் கருகாமையிலுள்ள திருக்கருகாவூர் கிராமத்தில் சாம்பமூர்த்தி அய்யரிடம் அவன் வேலைக்கமர்ந்து பதின்மூன்று வருஷங்களாகி விட்டன.

அவன் ஊர் ஊராய்ச் சுற்றிப் பிச்சை யெடுத்துக் கொண்டு அந்த ஊருக்கு வந்த போது அவனுக்கு எட்டு வயது. ஓர் நாள் சாம்பமூர்த்தி அய்யர் தன் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து ஏதோ புஸ்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தார். அந்த சமயத்தில் போய் அவன் பிச்சை கேட்டான். அய்யர் புஸ்தகத்தை மூடி விட்டுத் தலை

நிமிர்ந்தபோது, மிகவும் மெலிந்து வாடிய சரீரத்துடன் நின்ற சிறுவனைப் பார்த்தபோது அவரது கண்களில் நீர் பெருகியது. சாம்பமூர்த்தி அய்யருக்கு எல்லா பாக்யமிருந்தும் புத்ர பாக்யமில்லை.

ஓர் குழந்தையைப் பெறுவதற்காக அவர் எவ்வளவோ ஸ்தல யாத்திரைகள், தான தருமங்கள் செய்தும் பிரயோசன மேற்பட வில்லை.

''பணக்காரனான தனக்கு ஓர் குழந்தையளிக்காத பகவான், ஏழைகளுக்கு நிறையப் புத்திரர்களைக் கொடுத்து, அந்தக் குழந்தை களை இவ்விதம் பிச்சை யெடுத்துச் சாப்பிடும்படி செய்கிறாரே!'' என்பதை நினைத்தபோது அவர் மனம் இளகி விட்டது.

அதே சமயத்தில் அவர் மனதில் மற்றோர் யோசனையும் தோன்றியது. உடனே கண்களைத் துடைத்துக் கொண்டு பையனின் பூர்வோத்தரங்களை விசாரித்தார். அவனுக்கு விவரம் தெரிந்தது முதல் நடந்தது முழுவதும் கூறினான்.



அதன் பின் சாம்பமூர்த்தி அய்யர் அவனைத் தன்னிடமே யிருக்கும்படி கூறி, உள்ளே அழைத்துச் சென்று, ஸ்னானம் செய்வித்து, போஜனமும் செய்வித்தார்.

## 3

**அ**வன் அந்த வீட்டிற்கு வந்த ஐந்து வருஷங்களுக்குப் பிறகு சாம்பமூர்த்தி அய்யருக்கு ஓர் பெண் குழந்தை பிறந்தது.

இதுவரை உலகத்தில் பற்றில்லாதவன் போல், தன் வேலை களைச் செய்து விட்டு, ஒழிந்த நேரங்களில் ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும் அவனுக்கு உலகத்தில் ஓர் பற்றுதல் ஏற்பட்டது. எதிலும் ஆசை வைக்காத அவனது மனம், அந்தக் குழந்தையின் மேல் ஆசை கொண்டது.

அந்தக் குழந்தையின் மேல் அவன் கொண்டிருந்த அன்புதான், அவனை அந்த வீட்டிலே அவ்வளவு நாள் இருக்கும்படி செய்தது.

குழந்தையின் பெயர் காமு. அவன் கூப்பிடுவது மட்டும் ''ராணிப் பாப்பா'' என்று.

குழந்தைக்கு ஒரு வயதாய் விட்டது. தவழ்ந்து தவழ்ந்து வாசற்படி தாண்டி வெளியே போகத் தொடங்கி விட்டாள். அதிலிருந்து அந்தக் குழந்தையைத் தூக்கிச் சுமந்து குழந்தையைக் காவல் காக்க வேண்டிய வேலை அவனைச் சேர்ந்தது.

அவன் இப்பொழுது இரு மடங்கு வேலை செய்கிறான். அவனது திரேகத்தில் சோம்பலே தோன்றுவதில்லை.

குழந்தைக்கு விளையாட்டுக் காட்டிக் கொண்டே தனது வேலைகளையும் செய்வான்.

வேலையெல்லாம் முடிந்த பின், அந்தத் தெருக்கோடியிலுள்ள இடிந்த கோயிலில் சென்று உட்கார்ந்து கொண்டு ('ராணிப் பாப்பா') காமுவுடன் கொஞ்சிப் பேசிச் சிரித்து அளவளாவிக் கொண்டிருப்பான். குழந்தைக்கும் அவனுக்கும் எவ்வளவோ பேச்சுக்கள் நடக்கும். ஆனால் அவர்கள் பாஷை அவர்களுக்கும், கடவுளுக்கும்தான் தெரியும். நமக்குத் தெரியாது.

குழந்தைக்கு ஐந்து வயதாகி விட்டது. அவன் 'ராணிப் பாப்பா'வைத் தோளில் தூக்கிக் கொள்வதில்லை. தன்னுடன் அழைத்துச் செல்வதுமில்லை. அவன் தனியாகத்தான் கோயிலுக்குப் போகத் தொடங்கினான்.

## 4

தெருக் கோடியிலிருந்த பாழடைந்த கோவிலில் ஓர் மண்டபமிருக்கிறது. அதை ஊரிலுள்ள சோம்பேறிகள் சீட்டாடும் மடமாக்கிக் கொண்டிருந்தனர்.

அவன் குழந்தையுடன் சென்ற சில நாட்கள் வரை அவன் உள்ளே சென்றதில்லை. ஓர் நாள் உள்ளே சென்று கோவிலைச் சுற்றிப் பார்த்துக் கொண்டு வரும் போது, மண்டபத்தில் சிலர் பணம் வைத்துச் சீட்டாடுவதைப் பார்த்து அங்கு நின்றான். அன்றிலிருந்து தினம் அவன் அங்கு சென்று அவர்கள் ஆடுவதைப் பார்க்கத் தொடங்கினான்.

ஆனால் அவன் ஆடுவதில்லை. ஒரு நாள் அவன் அங்கு சென்றிருந்த போது, ஒருவன் ஆட்டத்தில் கெலித்துப் பிறரது பணத்தை யெல்லாம் வாரிச் சுருட்டித் தனது மடியில் கட்டிக் கொண்டதைப் பார்த்தவுடன், அவன் மனதைப் பேராசை யென்னும் பேய் பணத்தாசை என்னும் தன் சகாவோடு பிடித்துக் கொண்டது. அதற்கு மறு நாள் முதல் அவனும் காசு கொண்டு வந்து ஆடத் தொடங்கினான்.

அவனுக்குச் சூதாடுவதற்குப் பணம் தாராளமாயிருந்தது.

சாம்பமூர்த்தி அய்யர், தன் வீட்டில் எந்த விசேஷம் நேர்ந்தாலும், ஊரிலோ, வெளியிலோ திருவிழா முதலியன

நடந்தாலும், அந்தச் செலவுக்காக அவனுக்குச் சில்லறை கொடுப்ப துண்டு. அவைகளை யெல்லாம் அவன் ஓர் தகர டப்பாவில் போட்டுச் சேர்த்து வைத்திருந்தான்.

வயிற்றுக்கு ஆகாரமும், உடுக்கத் துணியும் அவனுக்குக் கிடைத்தபோது அனாவசியமாகச் செலவு செய்ய அவன் மனம் ஒப்பவில்லை. அப்படிச் சேர்த்து வைத்திருந்த பணத்திலிருந்து அவன் சூதாடத் தொடங்கினான்.

இவ்விதம் மூன்று வருஷங்கள் கழிந்து விட்டன.

இவன் சூதாடும் சமாசாரம் ஓர் நாள் சாம்பமூர்த்தி அய்யருக்கு எப்படியோ தெரிந்து விட்டது.

அவனைக் கூப்பிட்டார். அவன் அடக்க ஒடுக்கமாய்ச் சற்று தூரத்தில் நின்று கொண்டிருந்தான்.



சாம்பமூர்த்தி அய்யர் பேசத் தொடங்கினார். ''நீ தினம் பாழுங் கோயிலுக்குப் போகிறாயா?''

''ஆம்.''

''எதற்கு?'' சாம்பமூர்த்தி அய்யரின் குரல் அதிகாரத்துடன் தொனித்தது. இதுவரை அவனிடம் இவ்விதம் அவர் பேசியதே யில்லை. அவர் கேட்டதற்கு அவன் பதில் சொல்லவே யில்லை. தலையைக் குனிந்து கொண்டு நின்று கொண்டிருந்தான். மறுபடியும் சாம்பமூர்த்தி அய்யர் கேட்டார்: நீ சூதாடுகிறாயாமே? உண்மை தானா?''

''ஆம், உண்மைதான்.''

''பணம் ஏது?''

''எனது செலவுக்கென்று தாங்கள் கொடுத்த சில்லறை யெல்லாம் சேர்த்து வைத்திருந்தேன் அதிலிருந்து எடுத்து''..... அவனால் பேச முடியவில்லை. சாம்பமூர்த்தி அய்யர் சிறிது நேரம் சும்மாயிருந்தார். பிறகு மறுபடியும் கேட்டார். ''இப்பொழுது எவ்வளவு பணம் இருக்கிறது.''

''தாங்கள் கொடுத்தது பூராவும் இருக்கிறது.''

''சரி! போனது போகட்டும். இனிமேல் சூதாடப் போகக் கூடாது. தெரியுமா?''

''சரி, இனிமேல் போகமாட்டேன்!'' என்று மிகுந்த தாழ்வுடன் கூறினான்.

''நீ சூதாடுவதாக இன்னொரு தடவை என் காதில் விழுந்தால் உன்னை வீட்டை விட்டு வெளியே துரத்தி விடுவேன். ஜாக்கிரதை!'' என்று மிரட்டி விட்டு எழுந்து உள்ளே போய் விட்டார்.

அவன் தலையைக் குனிந்து கொண்டு சிறிது நேரம் அங்கேயே நின்று கொண்டிருந்தான். பிறகு தன் வேலைகளைச் செய்யப் போய் விட்டான்.

அன்றிரவு எல்லாரும் சாப்பிட்டுப் படுத்துக் கொண்டாய் விட்டது. அவன் மட்டும் தூங்கவில்லை. அன்று பகலில் அவன் சூதாட்டத்திற்குப் போகவே யில்லை.

அவனது மனம் வீட்டில் லயிக்கவில்லை. பாழுங் கோயிலி லுள்ள அவனது 'சூதாடி' நண்பர்களை நினைத்தது. அவனது கால்கள் நடுங்கின.

சிறிது நேரம் யோசனை செய்தான். பிறகு எழுந்து தனது தகர டப்பாவை எடுத்துக் கொண்டு பாழுங் கோயிலுக்குப் போய் விட்டான். அவனது கையிலிருந்த பணமெல்லாம் கரையத் தொடங்கியது. பத்துப் பதினைந்து நாட்களுக்குள் அவனது தகர டப்பா காலியாயிற்று.

கார்த்திகை மாதம். எல்லா வீட்டு வாயிலும் தீபங்கள் அலங்காரமாக அடுக்கினாற் போல் வைத்திருக்கின்றன. சாம்ப மூர்த்தி அய்யர் வீட்டு வாசலில் ஏற்றியிருந்த தீப அகல்களில் எண்ணெய் ஊற்றிக் கொண்டிருந்தாள் காமு. பக்கத்தில் நின்று, வீதியில் போகும் துஷ்டப் பயல்கள் அகல்களைத் தூக்கிக் கொண்டு போய்விடாமல் காவல் காத்துக் கொண்டிருந்தான் அவன்.

மறுநாள் காலையில் அவன் மிகுந்த பரபரப்புடன் வேலை செய்து கொண்டிருந்தான். வீட்டிலிருந்த பழைய குத்து விளக்கு களையும், வெண்கல அகல் விளக்குகளையும் தேய்த்துத் துடைத்து வைத்துக் கொண்டிருந்தான். அன்றுதான் பெரிய கார்த்திகை. ஆனால் அவன் மனம் வேலையில் ஈடுபடவில்லை. பாழுங் கோயிலும் அதிலுள்ள சூதாடி நண்பர்களும் இன்று இரவு அவனை எதிர் பார்ப்பது போல் அவனது மனதில் தோன்றியது. மறுபடியும் ஆசை. பத்துப் பதினைந்து நாட்களாக அவன் சூதாடப் போக வில்லை. அந்த ஆசையெல்லாம் ஒன்று சேர்ந்து அவனது மனதில் புகுந்து கொண்டது. ஆனால் அவனிடம் காசில்லையே! எப்படி யாவது பணம் சம்பாதிப்பது என்று அவன் தீர்மானித்து விட்டான்.

சாம்பமூர்த்தி அய்யர் உள்ளிருந்து அவனைக் கூப்பிட்டார். அவன் உள்ளே சென்றதும், ஏதோ வேலை கொடுத்து வெளியே அனுப்பினார். அவன் வெளியே வரும் வழியில் காமுவின் படுக்கை யறை திறந்திருந்தது. அவளது படுக்கை விரித்தபடி யிருந்தது. ஆனால் காமு அங்கில்லை, படுக்கையைச் சுற்றி வைத்து விட்டுப் போகலாமென்று உள்ளே நுழைந்தான். காமுவின் படுக்கையிலுள்ள தலையணையைத் தட்டி ஒழுங்காக வைப்பதற்காக அவன் அதை எடுத்தான். தலையணையின் கீழ்க் கிடந்த லோலாக்கு அவனது கண்களில் திடீரென்று படவே அவன் ஸ்தம்பித்து விட்டான்.

அதை அவன் கையில் வைத்துக் கொண்டு சிறிது நேரம் யோஜனை செய்தான். அவன் மனதில் இரண்டு கட்சிகள் தோன்றி வாதாடின. ஒன்று நியாயக் கட்சி. மற்றொன்று அசுரக்கட்சி. ''லோலாக்கைச் சாம்பமூர்த்தி அய்யரிடம் கொடுத்து விடு!'' என்று நியாயக் கட்சி கூறியது. ''உன் கையில் பணமில்லை. இன்றிரவு உனது 'லக்ஷிமி' பாழுங் கோயிலில் உனக்காகக் காத்துக் கொண் டிருப்பாள். நீ போகாவிட்டால் அவளும் கோபித்துக் கொண்டு போய் விடுவாள். பிறகு, அவளது கருணா கடாக்ஷம் என்றைக்கும் உன் பக்கம் திரும்பாது. ஆதலால் இந்த லோலாக்கை விற்று, அதில் வரும் பணத்தைக் கொண்டு சூதாடு. லக்ஷிமியின் கருணையினால் நீ இது வரையில் தோற்றுப் போயுள்ள பணமெல்லாம் உன்னிடமே திரும்பி வந்து சேரும். பிறகு இந்த லோலாக்கை விற்றவரிடமிருந்து விலைக்கு வாங்கி ஒருவருமறியாமல் இங்கே கொண்டு வந்து போட்டுவிடு. அதனால் உனது குற்றமும் மறைந்து போகும்,'' என்று கூறியது சுய நலக் கட்சி. இப்படியாகப் பல விவாதங்கள் நடந்த பின், சுயநலக் கட்சியின் வெற்றியினால் தூண்டப் பெற்ற அவன் லோலாக்கை மடியில் மறைத்துக் கொண்டான்.

அன்று பகல் பொழுது கழிந்து இரவும் வந்தது. ஒவ்வொரு வீட்டு வாசலிலும் அகல் தீபாலங்காரம் செய்து ஒரே ஜகஜ் ஜோதியை உண்டாக்கி விட்டனர் அவ்வூர்ப் பெண்கள். சாம்ப மூர்த்தி அய்யரின் வீட்டு வாசலிலும் தீபாலங்காரம் செய்யப் பட்டிருந்தது. அவைகளை மேல் பார்த்துக் கொண்டு காமுவும், காவலுக்கு அவனும் இருந்தனர். அன்றிரவில் நான்கைந்து நாழிகைப் பொழுதும் கழிவதற்குள் அவனுக்குப் பொறுக்க வில்லை. காமுவின் லோலாக்குத் தொலைந்த சமாசாரம் எங்கே வெளியாகி விடுமோ என்ற பயம் ஒரு பக்கம். தனது நண்பர்கள் தனது வரவை எதிர்பார்த்திருப்பார்களே என்ற ஆவல் ஒரு புறம். தனது அதிர்ஷ்ட லக்ஷிமி தன்னை இன்று எங்கு புறக்கணித்து

விடுவாளோ என்ற கவலை ஒருபுறம் அவனை வாட்டிக் கொண்டிருந்தன.

ஒரு மட்டாய் மணி பத்தடித்தது. ஊரெல்லாம் நிசப்தமா யிருந்தது. சாம்பமூர்த்தி அய்யர் வீட்டில் எல்லோரும் நித்திரா தேவிக்கு அடிமையாகி விட்டனர். அவனை மட்டும் நித்திரா தேவியின் சக்தி ஒன்றும் செய்ய முடியவில்லை. மெல்ல எழுந் தான். தனது தலை மாட்டிலிருந்த தகர டப்பாவை மெதுவாக - சப்தப்படாமல் எடுத்துக் கொண்டான். யாராவது விழித்துக் கொண்டிருக்கிறார்களோ என்று அறிவதற்காகச் சிறிது நேரம் அங்கேயே உட்கார்ந்திருந்த பிறகு எழுந்து பாழுங் கோயிலுக்குப் புறப்பட்டான். அவனது கால்கள் சற்று விரைவாக நடந்து சென்றன. கோவில் கதவு சாத்தப்பட்டிருந்தது. மெதுவாகத் திறந்து கொண்டு உள்ளே சென்று சூதாடிக் கொண்டிருந்த மற்றவர்களுடன் அவனும் கலந்து கொண்டான்.

இரவு பன்னிரெண்டு மணியிருக்கும். ஆட்டம் முடிவடைந்தது. தனது கையிலிருந்த பணத்தை யெல்லாம் தோற்று விட்டு, தேள் கொட்டிய திருடனைப் போல், ஒன்றும் தோன்றாமல் கோவிலை விட்டு வெளியேறினான். அவனது மனம் மறுபடியும் கவலையில் வீழ்ந்தது. சாம்ப மூர்த்தி அய்யரின் வீட்டுக்குப் போகலாமா வேண்டாமா என்று யோசனையில் அவன் மனம் குழம்பியிருந்தது. அவன் கால்கள் மட்டும் அந்த வீட்டை நோக்கிச் சென்று கொண் டிருந்தன. அவனால் நடக்க முடியவில்லை. அவனது கால்கள் பின்னிக் கொண்டன. முழங்கால்கள் முட்டிக் கொண்டன. எப்படியோ அவன் வீட்டையடைந்தான்.

காலை பத்துமணி சமயமிருக்கலாம். வட்டிக்கடை தந்தவக்ரம் செட்டியார் சாம்பமூர்த்தி அய்யரைப் பார்ப்பதற்காக வந்தார்.

இருவரும் குசலப் பிரச்னங்கள் விசாரித்துக் கொண்ட பிறகு செட்டியார் தன்னைத் தேடி வந்ததன் காரணத்தை வினவினார் சாம்பமூர்த்தி அய்யர். செட்டியார் தொண்டையைக் கனைத்துக் கொண்டு, தன் மடியிலிருந்த ஒரு சிறு காகித மடிப்பை எடுத்துக் கொண்டே பேசலானார்.

''நேற்று மத்தியானம் அவன் என் கடைக்கு வந்தான். வந்து இந்த லோலாக்கைக் கொடுத்து ஐந்து ரூபாய் கேட்டான். உடனே எனக்குச் சந்தேகம் தோன்றியது. 'ஏது?' என்று கேட்டேன்.

''கீழே கிடந்தது'' என்றான்.

''எங்கே கிடந்த'தென்று கேட்டேன்.

''உங்கள் வீட்டில் கிடந்ததாகச் சொன்னான். உடனே நான் பணம் கொடுக்க முடியாது என்று சொன்னேன். அவன் வெளியே போவதற்காகத் திரும்பினான். அதற்குள் என் மனதில் ஓர் யோசனை தோன்றியது.

''நகையை அவன் வேறெங்கேனும் விற்று விட்டால் நகை போய்விடும். நாமே வாங்கினால் நாளைக்கு அவரிடம் கூறிப் பணத்தை வாங்கிக் கொள்ளலாமே என்று நினைத்து, அவனைக் கூப்பிட்டு, பணத்தை எப்பொழுது திருப்பிக் கொடுப்பாய் என்று கேட்டேன். 'காலையில் எட்டு மணிக்குள்,' என்றான். அந்தக் கெடுவுக்குள் பணம் வராவிட்டால் பிறகு நகையை மீட்கக் கூடா தென்ற உறுதியின் மேல் ஐந்து ரூபாய் கொடுத்தேன். அவன் இதுவரை வரவில்லை.



''லோலாக்கின் பெறுமானம் நாற்பது ரூபாய் இருக்கும். அதை நான் வைத்துக் கொள்ளக் கூடாதென்றுதான் உம்மிடம் கொண்டு வந்தேன். ஐந்து ரூபாய் கொடுத்தால் அதை உங்களிடம் கொடுத்து விடுகிறேன்,'' என்றார் செட்டியார். இவர் இவ்வளவு பேசி முடிப்பதற்குள்ளாகக் காகித மடிப்பிலிருந்த லோலாக்கை எடுத்துச் சாம்பமூர்த்தி அய்யருக்குக் காண்பித்தார். சாம்பமூர்த்தி அய்யருக்கு விஷயம் விளங்கி விட்டது.

முதல் நாள் காலையில் தனது பெண்ணின் ஒரு காது லோலாக்கைக் காண வில்லையென்று தன் மனைவி சொன்ன போது அதை அவர் கவனிக்கவில்லை. இப்பொழுது, அந்த லோலாக்கை அவன் தான் திருடி விட்டானென்று அவர் நிச்சயமாக நினைத்துக் கொண்டார்.

செட்டியார் ஐந்து ரூபாயை வாங்கிக் கொண்டு வெளியே போய்விட்டார்.

உள்ளே சென்ற சாம்பமூர்த்தி அய்யர் தனது வண்டி மாட்டை ஓட்டுவதற்காக வைத்திருந்த சவுக்கைக் கையிலெடுத்துக் கொண்டு அவனைக் கூப்பிட்டார்.

அவன் வந்தவுடன் கையிலிருந்த சவுக்கைக் காண்பித்துக் கொண்டே,

''லோலாக்கைக் காணவில்லையாம். நீ எடுத்தாயா?'' என்றார் அதட்டிய குரலில்.

''ஆம்! நேற்று எடுத்தேன்.'' என்று மெல்லிய குரலில் பதில் சொன்னான் அவன்.

''அது எங்கே?''

''அதை விற்று விட்டேன்.''

அவர் கையில் சாட்டையையும், அவரது அதட்டலையும் கண்டவுடன், அவருக்குத் தனது ரகஸியமெல்லாம் தெரிந்து போய் விட்டதென்று அவன் தெரிந்து கொண்டான்.

இனிமேல் பொய் சொல்வதில் பலனில்லையென்று அறிந்து கொண்ட அவன் உண்மையைக் கூறத் தொடங்கினான்.

''யாரிடம் விற்றாய்?'' என்று ஐயர் கேட்டார்.

''செட்டியாரிடம்,'' என்றான் அவன்.

''எவ்வளவுக்கு?''

''ஐந்து ரூபாய்க்கு.''

''பணமெங்கே?''

அவன் பதில் சொல்லாமல் நின்றான். தன் கையிலிருந்த சாட்டையால் அவனைப் பளீரென்று இரண்டடி கொடுத்துவிட்டு, ''திருட்டு ராஸ்கல்! அது எங்கே கிடந்ததுடா?'' என்றார் ஆத்திரத் துடன்.

அவன் பதில் சொல்லாமலிருக்கவே, அவருக்குக் கோபம் அதிகமாய் விட்டது.

சாட்டையால் சுளீர் சுளீரென்று அடித்துக் கொண்டே, ''களவாணிப் பயலே! இனிமேல் எடுப்பாயா? நான்தான் சூதாடக் கூடாதென்று சொன்னேனோ இல்லையோ? மறுபடியும் சூதாட்டம். அதுக்குப் பணமில்லாமப் போனா திருட்டுத்தனம்.....'' என்று கூறிக் கொண்டிருக்கையில், காமு ஓடி வந்து அவர் கையைப் பிடித்துக் கொண்டு, ''அப்பா! அவனை ஏதுக்கு அடிக்கிறே?'' என்றாள், அவனைப் பரிதாபமாய்ப் பார்த்துக் கொண்டு.

''ஏதுக்கா? திருடன்! ஒன்னோடே லோலாக்கை எடுத்துக் கொண்டு போய் வித்து சூதாடிட்டு வந்திருக்கான். நீ தள்ளிப் போ. இன்னிக்கு அவன் மணிக்கட்டை முறிச்சுடறேன்...'' என்று கூறிக் கொண்டே சாட்டையின் குச்சியால் ஓங்கி அவனது மணிக்கட்டில் அடித்தார். அந்த அடி மிகவும் பலமாக விழுந்ததாகையால் சிறிது சதை பெயர்ந்து அதிலிருந்து ரத்தம் கசிந்து சொட்டுச் சொட்டாகப் பூமியில் விழுந்தது.

அந்தக் கோரக் காட்சியைக் கண்ட காமுவின் கண்களில் நீர் பெருகியது. அவள் சாம்பமூர்த்தி அய்யரின் இரண்டு கைகளையும்

பிடித்துக் கொண்டு, ''அப்பா! அவன் திருடல்லே, அப்பா! நான் தான் அவனுக்கு அந்த லோலாக்கைக் கொடுத்தேன். அதுக்காக அவனை அடிக்காதேப்பா!'' என்று கெஞ்சுதலாகக் கூறி வேண்டினாள்.

தனக்காகப் பரிந்து பேசும் பெண் குழந்தை - அவன் தூக்கி வளர்த்த அவனது ஆசைக் காமு - கெஞ்சுவதைப் பார்த்தபோது அவனது மனதில் தேள் கொட்டியது போன்ற வேதனை தோன்றியது.

தன் கையை உதறிக் கொண்டே, சாம்பமூர்த்தி அய்யர் காமுவைப் பார்த்து, ''ஏன் கொடுத்தாய்? நீதான் குழந்தை கொடுத் தாய். அந்தத் திருட்டு ராஸ்கல் அதை வாங்கி விற்கலாமா?'' என்று கூறிக் கொண்டே மறுபடியும் அவனை அடிப்பதற்குக் கையிலிருந்த சாட்டையை ஓங்கினார். மறுபடியும் காமு, அவர் கைகளைப் பிடித்துக் கொண்டு, ''அப்பா!....'' அதற்கு மேல் அவளால் பேச முடியவில்லை.



''ஐயா! குழந்தை கொடுக்கவில்லை. நானேதான் படுக்கையி லிருந்து எடுத்து விற்றுச் சூதாடினேன்!'' என்றான் கண்களில் நீர் பெருக. சாம்பமூர்த்தி அய்யருக்கு என்ன செய்வதென்று தெரிய வில்லை. காமு சொல்வது பொய்யா அவன் சொல்வது பொய்யா என்பதை அவரால் கண்டறிந்து கொள்ள முடியவில்லை. காமுவைப் பார்த்து, ''காமு! நீ உள்ளே போகிறாயா இல்லையா?'' என்று ஓர் அதட்டல் போட்டார். காமு பயந்து கொண்டு உக்ர மூர்த்தியாய் விளங்கும் தகப்பனாரைப் பார்த்துக் கொண்டே உள்ளே போய்விட்டாள்.

அவள் போனவுடன் சாம்பமூர்த்தி அய்யர் தன் கையிலிருந்த சவுக்கை மூலையில் எறிந்துவிட்டு, அவனை நோக்கி, ''எழுந் திருந்து போடா வெளியே! இனிமேல் என் எதிரில் - இந்தக் கிராமத் துக்குள் நீ தென்பட்டால் உன் முதுகுத் தோலை உரித்து விடுவேன், போ. காமு சிபாரிசு பண்ணியதால் இப்பொழுது விட்டு விடுகிறேன். இனிமேல் எங்கேயும் இந்த மாதிரி செய்யாதே, பத்திரம்!'' என்று கூறிவிட்டு அவனை முறைத்துப் பார்த்தார்.

தலையைக் குனிந்தவாறு அவன் வெளியே சென்றான்.

இது நடந்து இரண்டு மாதங்களுக்கெல்லாம் காமுக்குக் கல்யாணம் நடந்தது. கல்யாணத்தின் போது அவனை நினைத்துக் கொண்டு காமு இரண்டு துளிக் கண்ணீர் விட்டாள். சாம்பமூர்த்தி அய்யருக்கும், அவன் இந்த சமயத்தில் இல்லாதது வருத்தந்தான்.

அவன் சாம்பமூர்த்தி அய்யரால் சிறு பிராயம் முதல் பிள்ளையைப் போல் வளர்க்கப்பட்டவனல்லவா? காமுவைத் தூக்கிச் சுமந்தவனல்லவா?

ஒருநாள் காலையில் ஓர் மாட்டு வண்டியொன்று கிராமத்தைக் கடந்து சென்று கொண்டிருந்தது. காமு, அவள் கணவன், மாமனார், மாமியார் எல்லோரும் வண்டியிலிருந்தனர்.

அந்த வண்டிப் பாதையின் இருபுறமும் மரங்கள் அடர்ந்து வளர்ந்திருந்தன. அந்த மர வரிசையின் நடுவேயுள்ள ஓர் பெரிய ஆலமரத்தடியில் அவன் மெலிந்து, கருகி, எழுந்திருக்கக்கூட முடியாத நிலைமையில் கிடந்தான். வண்டி அவனைத் தாண்டிச் சென்ற போது அவனது கண்கள் தற்செயலாய் வண்டியை நோக்கின. அதே சமயம் காமுவின் கண்களும் அவனை நோக்கின. நான்கு கண்களிலும் நீர் பெருகியது. ஆனால், அவனுக்குக் காமுவால் இப்பொழுது உபகாரம் செய்ய முடியாது. அவனும் காமுவிடம் பேச முடியாது. இந்த நிலைமையில் வண்டி மறையும் வரையில் இருவர் கண்களும் ஒருவரை யொருவர் பார்த்த வண்ணமே யிருந்தன.

அவன் அனாதை!

அவனுக்கு உலகில், தற்பொழுது யாருமில்லை, கடவுளைத் தவிர.

**(ஒரு ஹிந்திக் கதையின் தழுவல்)**

**- 1936**